தமிழ்க்கவி மாலை:—மலர்-௫.

கல்குளம்-குப்புசாமிமுதலியார்

பதிப்பித்தது.



# ஒருதுறைக்கோவை

.. சாரியர்

சிவமயம்.



அமிர்தகவிராயரியற்றிய

# நாணிக்கண்புதைத்தல்

என்னும்

# ஒருதுறைக்கோவை.

இது

வித்வான்

காஞ்சீபுரம் - இராமசாமிநாயுடு அவர்களாலுங்

கல்குளம்-குப்புசாமிமுதலியாரவர்களாலும்

பார்வையிடப்பட்டு,

---

சென்னை:

ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1905.

விலை அணா 4.

---

# பொருளடக்கம்.




| விஷயம். | | பக்கம். |
|---|---|---|
| 1. நூலாசிரியர் வரலாறு | ... | v. |
| 2. நூல் ... ... | ... | 1. |
| 3. செய்யுள் முதற்குறிப்பகராதி | ... | 53. |
| 4. பிழைதிருத்தம் ... | ... | 58. |




# நூலாசிரியர் வரலாறு.

இந்நூலாசிரியராகிய அமிர்தகவிராய ரென்பவர், மதுரைஜில்லா, சிவகங்கை தாலுக்காவிலுள்ள பொன்னுங்கால் என்னும் கிராமத்திற் பிறந்தவர். இவர் தோன்றியகாலம் பதினேழாம் நூற்றாண்டின் ஆரம்பகாலமெனத் தெரிய வருகிறது. கி. பி. 1635-1645—வருஷம்வரை அரசாண்ட தளவாய் சேதுபதியின் சகோதரியாகிய கங்கை நாச்சியார்க்குப் புத்திரராயுதித்து தன் அம்மானாகிய தளவாய் சேதுபதி தனக்குத்தந்த இராமநாதபுரத்தைக் கைக்கொண்டு முடிசூட்டப்பெற்று அதற்கு வடக்கிலும் தெற்கிலுமுள்ள அநேக சிறு நாடுகளைத் தன்வயமாக்கி எங்கும்புகழ்பெற்று கி-பி 1645-ம் வருஷமுதல் 1670-ம் வருஷம்வரையில் அரசாண்ட தளவாய் ரகுநாதசேதுபதியின் சமஸ்தான வித்வான்களுள் ஒருவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர். அச்சேதுபதியின் வாயில் வித்வான்கள் பலருள்ளும் இவர் அதிக சிரேஷ்டமாக எண்ணப்பட்டவர். அதற்குக்காரணம் என்னையெனின்:—அரசனும் ஆஸ்தான வித்துவான்களும் ஒருநாள் மாலைப்பொழுது உய்யான வனத்திலிருந்தபோது அரசன்பாவலர்களைமனோரம்மியமான பற்பல பாடல்களைச் சொல்லச் சொல்லிக் காலங் கழித்துக் கொண்டிருக்கையில், அகப்பொருளைப்பற்றி வார்த்தை நிகழ்ந்தகாலத்து அரசன் தன்னெதிரிலிருந்த புலவர்களை நோக்கி, அகப்பொருட்டுறையுள் ஏதேனு மொன்றில் பல பாடல்செய்ய வல்லீரோ என்று கேட்க, அவருள் சிலர் ஒரு துறையிலே பத்து, இருபது, முப்பது, நாற்பது, ஐம்பது, பாடல் செய்வோம் என்றார்கள். அமிர்த கவிராயரோ "நான் நூறு பாடல் செய்வேன்" என்றார். அவர்கள் இவர்சொன்னதை வேறுவிதமாகச் சிரத்து 'நானூறு பாடல் செய்வேன்' என்று சொன்னதாகத் தர்க்கிக்கவே இவர் "இதற்கென்ன இவ்வளவு போராட்டம்; நானூறும் செய்வேன், அதையும் ஒருபக்கத்தில் எழுதி முடிப்பேன்" என்றார்.

இவ்வாறு செய்வது அருமையென அறிந்த அனைவரும் இவர் எப்படிச் செய்யப்போகிறார் என்று எண்ணமிட்டுக்கொண்டிருக்கையில், இவர் குறித்த தவணைக்குள், 'நாணிக்கண் புதைத்தல்' என்னும் துறையில் நானூறு கட்டளைக்கலித்துறைசெய்து முடித்து முதலிரண்டடியில் தன்னரசனுடைய பிரபாவங்களைக்கூறிப்பின்னிரண்டடியில் அகப்பொருளொன்றும் புறப்பொருளொன்றுமாக இரண்டு பொருள் தோன்றும்படி செய்தனர்.

இந்நூலை அரங்கேற்றிய காலத்து அரசனும் அழைக்காறுகொண்ட வாயில் வித்வான்களும் இக்கோவையின் பெருமையையும் அகப்பொருளினிமையையும், புறப்பொருளின் நயத்தையுங்கண்டு மிக வியந்தனர். அரசன் அவர்மீது பிறந்த அன்பின் அறிகுறியாக அவர்பிறந்த ஊராகிய பொன்னங்கால் *என்னும் ஊரையே அவரும் அவர் சந்ததியாரும் சந்திராதித்தருள்ளவரை அனுபவிக்கும்படி மானியமாக விட்டுவிட்டான்.

இவர்செய்த கோவையிலுள்ள பல செய்யுட்களினும் பொதிந்துள்ள பொருள் இனிமைபயக்குமென்பது அறிந்தோர் அனைவர்க்கும் தெரிந்ததேயாயினும், மற்றவரும் இக்கோவையைக் கற்றுணர்ந்து ஆனந்திக்கும்பொருட்டு இரண்டொரு செய்யுட்களை உதாரணமாக ஈண்டெடுத்துக் காட்டுவாம்.

மஞ்சரங் கருதலர் போர்ப் படைமேற் சண்ட மாருதம்போல்
விஞ்சரங்க மூலபல ரகுநாதன் வியன் சிலம்பிற்
பஞ்சாங்க மோதி மறைகாட்டிச் சொர்க்க மிப்பாற்படுத்தி
யஞ்சாங் குலத்தவர் பார்ப்பாரைச்சேர்ந்த ததிசயமே.

கடைமுன்னர் நின்று முடிமேற் றமதிருகை குவித்துப்
படைமன்னர் போற்றும் ரகுநாத சேதுபதி வரைவா

* One of the Inam villages in the Sivaganga Taluk. Page 69. Village statistics, Madura District, Census of India, 1901.

யிடைதான் குறைந்தது மச்சமுங் காட்டுவ தில்லை யென்றால்
மடவீருமது தனத்தை யெவ்வாறு மதிப்பதுவே.

இன்னுஞ் சிலதுறைகளில் தலைவன், நாணமுற்று கண்மூடி நின்ற தலைவியை நோக்கி, 'கண்மூடி யோகியர்போல நின்றீர் இக்கருத்தினுக்கு விண்மூடியவரை கைவிடில் ஏதம் விளைவிக்குமே' என்றும், 'காவியங்கை புனைந்தீர் விடுத்தீர் தனம் கஞ்சமலர்த்தேவியும் போல நின்றீர், விருப்பேதுங் கள் சிந்தனைக்கே' என்றும், 'சேலுங் கமலமும் காவியு மாவுந் தெவ்வேந்தைவென்ற வேலும் பொருவும் விழியை யெந்நாட்கண்டு மேவுவனே' என்றும் 'பதிசேரிளமுலை சங்கிலிகாட்டும் பணியணிந்தாய், துதிசேர்பரவையுங் காட்டில் என்போலில்லை சுந்தரனே' என்றும், 'வெங்காம வெய்ய விடாய்க் கிளநீர்தந்து வெவ்விடத்தை யங்காம வல்லி நல்லீர் மறைத்தீர் நன்றறிவுமக்கே' என்றும் 'பந்தாடல் கண்டனமம்மானை யாடலு பார்க்கவரந் தந்தாடல் செய்யில் உனக்கெய்துங்காண் வெகு தன்மங்களே' என்றும் 'கானத்தை வானத்தை நேர் சொலிடை யொருகன்னியத்தம் மீனத்தை நாடிச் செலக் கும்பராசி வெளிப்பட்டதே' என்றும், 'பருப்பதமீது மலருஞ் செங்காந்தள் பரவையிற் பூத்திருப்பது அதிசயங்காண்' என்றும், 'கோவூர் முன்காட்டியபின் குன்றத்தூர் வழிகூட்டியப்பா லூர்நுங் காஞ்சிபுரங் காட்டுத லொண்டை நாட்டியல்பே' என்றும், 'பண்கட்டு மென்மொழியீர் நீர் மிகவும் பலரறியக் கண்கட்டுவித்தையும் செப்பிடுவித்தையுங் கற்றவரே' என்றும், 'இவ்வுலகியற்கை காவியங்கற்றவர்க்கே யத்தமாகுங் கடபடமே' என்றும், கொடியொடு முரசுங்கணையுஞ் சிலையுங் கொடாமலணி முடிமாத்திரம் மதவேளுக்களித்தன் முறையல்லவே' யென்றும், 'வெந்தாகப் பசிதணிக்கக் கண்டிறவாம விளநீர் கொடுத்தென் கவலை யில்லையே' என்றும், 'சக்கிலியாயினர் பாப்பாரும்

கைகொள்ளச் சம்பந்தத்தால் அக்கிரமமென்று குயவரினைத் வெளியாக்கினரே' என்றும், 'உத்தமராயினர் சான்றோர் சண்டாளருயர் மருடவர்த்தனர் தாழ்ந்தனர் பாருங் கலியுகவஞ்சனையே' என்றும், 'நினைநற்கரும் பைத்தராமற் புழுகிலகு பன்றுடை மூடுகுரும்பைதந்தா யென்னபாக்கியமே' என்றும், இவ்வாறு பற்பலவாறு வுரைத்த உரையின் சொன்னயமும் பொருணயமுங் கண்டும் நூலினை முற்ற நோக்கக் கருதாம லிருப்பவர்கள் யாவர் ?

இவர்காலத்து, சோழநாட்டினும் தொண்டைநாட்டினும் விளக்கமுற்றிருந்த புலவர்களுட் சிறந்தோர்முறையே இலக்கண விளக்கஞ்செய்த வைத்தியநாதநாவலரும், கழுக்குன்றப்புராணம்செய்த அந்தகக்கவி வீரராகவமுதலியாருமாம்.*

இவர் இரகுநாத சேதுபதி காலத்திருந்தவர் என்பதைக்கொண்டு, இவர் இருந்தது கி. பி. 1640 வருஷத்திற்கு முன்னும் பின்னும் என்று நிச்சயிக்கப்படலாமோ? இப்பெயரைக்கொண்ட சேதுபதிகள் பலர் இருந்திருக்கிறார்களே? எனின், இப்பெயரைக் கொண்டோர் பலர் இருந்திருப்பினும், இக்கோவை, 1, 13, 21, துறைகளினும் மற்றைப் பாக்களினும் கோவைபெற்றவன் தளவாய் ரகுநாத சேதுபதி என்றிருத்தலாலும், 1645–1670 வருஷம் வரையில் ஆண்டவன் அப்பெயர்கொண்டவன் தான் என்று நிருணயிக்கப் போதிய சான்றுளதாலும் † மேலும் இச்சேதுபதி கைக்கொண்ட ஊர்ப்பெயரும் நாட்டுப்பெயரும் துறைகளின் முன்னிரண்டடிகளில் குறிக்கப்பட்டிருப்பதாலும், அமிர்தகவிராயர் பதினேழாவது முதலிடைக் காலங்களிலிருந்தனர் என்று ஒருதலையாக்கொள்ள வியலும்.

கல்தளம் - குப்புசாமி முதலியார்.

* See P. 4. Preface to the Edition of இலக்கண விளக்கம்.

† Robert Sewell's South Indian Dynasties, pp 87-92.

# இரகுநாதசேதுபதி

# ஒருதுறைக்கோவை.

## நாணிக்கண்புதைத்தல்.

பூமேவுதெய்வத்தளிர்முகைபூத்தபொற்கோலவல்லி
நாமேவுகல்விப்புயறளவாய்ரகுநாதனிசைப்
பாமேவுகந்தகிரிமணிச்சாரற்பளிக்கறைசூழ்
காமேவுமற்புதநம்பாலகத்துக்களிதருமே. (௧)

சூலங்கைக்கொண்டவிராமேசர்தாண்முடிசூடியெழு
ஞாலங்கைக்கொண்டரகுநாயகன்செம்பிநாடனையீர்
சேலங்கைக்கொண்டுயர்வல்லமென்பாலருள்செய்தனல்ல
காலங்கைக்கொண்டரசாள்வதுபார்த்திருங்கண்களித்தே.

ஆயுந்தமிழினும்போரினும்பாரிலகத்திபனுஞ்
சேயும்புகழ்தளவாய்ரகுநாதன்சிலம்பில்வள்ளை
பாயுங்கயலிந்தநேமிகண்டாலெனப்பார்த்திடினுன்
றோயுந்தடமெனவேயணங்கேயுனைச்சொல்லுவனே. (௩)

தேனார்மணமுல்லைவெண்டாரும்பைந்தமிழ்ச்செந்தொடை
தானார்தடம்புயத்தான்ரகுநாதன்றமிழ்ச்சிலம்பில் [யுந்
வானாரிளம்பிறைவாணுதலீர்தும்பிவாழுமுங்கள்
கானார்குழற்குசியிற்செல்கின்றதாரையைக்காட்டிடுமே. (௪)

பண்டேந்தியசங்கினம்போலமல்லிகைப்பாரமுகைச்
செண்டேந்தியகரத்தான்ரகுநாயகன்றேவைவெற்பில்
வண்டேந்தியசெங்கைவாழ்வேயென்னெஞ்சமறுகுமகங்
கொண்டேந்தியவெங்கரிக்கோடுதோயுங்குருதிகண்டே. ()

வானைச்சுரபியைச்சிந்தாமணியைமந்தாரமென்றுங்
கானைப்பொருகொடையான்ரகுநாயகன்கந்தகிரிச்
சோனைப்புதுமதுவார்குழலீர்த்துதிக்கைவெம்போ
ரானைக்கிசையிலலங்காரமானுக்கழகல்லவே. (௬)

போரேறுவெங்கணரக்கன்முன்மார்தலிபூட்டியபொற்
றேரேறுசிங்கம்ரகுநாதன்றேவைச்சிலம்பில்வெய்ய
காரேறுவன்கண்மைசேர்கையுற்றுபொருகாளையின்சேர்
வாரேறுகொங்கையைநீதடுத்தாயிலைவன்புறமே. (௭)

மைம்மானிகர்த்தமலைவளர்காதலிமாதுவளர்
பெம்மானருட்குரியோன்ரகுநாதன்பிறங்கலன்னீர்
கைம்மான்குதிக்கழியாதென்றுநீரென்கலைமதிக்கு
ளிம்மான்குதிக்குமென்றேபிடித்தீர்கையிரண்டினுமே. (௮)

ஆரத்தொடையிடைநீலமிட்டாங்களிதோயுமுல்லை
வீரத்தொடைபுனைவோன்ரகுநாயகன்வெற்பனையீர்
மாரத்தொடைக்குண்முகைத்தாமரைவிட்டுவன்கொலைசூழ்
கோரத்தொடையெனவோபுதைத்தீர்மைக்குவலயமே. (௯)

நடைநிலஞ்சாதிகுலமோடழிவங்கநல்லைதந்திப்
படையணிசேர்முன்றிலான்ரகுநாதன்பனிவரைவாய்க்
குடையலர்காந்தளம்பூம்போதுதன்னைக்குறிஞ்சியெங்கோ
னுடையதண்போதென்னவோவிழிபூடுகொண்டொத்தியதே.

இயலைத்தலைபெற்றமுத்தமிழ்வாணர்க்கெழுமடங்கு
புயலைப்பொருவுகையான்ரகுநாதன்பொருப்பனையீர்
முயலைத்தவிர்த்தமதியூடுலாவியமூரிவரிக்
கயலைப்பிடிப்பதென்னோகுறயாதர்களிழிகழ்ந்தே. (கக)

வரைசேர்மருமத்திருவஞ்சியாடமணியுஞ்சலாம்
விரைசேர்தளவத்தொடைரகுநாயகன்வெற்பிலின்ப
வுரைசேர்தமனியப்பாவாய்செந்தேனங்கையூடுறமின்
னிரைசேரமிர்தகடத்தையென்னோவிட்டுநிற்கின்றதே. (கஉ)

பாகந்தருமிசைவல்லோர்க்குமான்மதம்பாய்தருகை
மேகந்தருதளவாய்ரகுநாயகன்வெற்பிலிந்திர
போகந்தருகளியானையிலேறுமென்புந்தியின்ப
மோகந்தருகிளியேநிட்டிசேர்தன்முறையல்லவே. (கங)

நாகஞ்செறிமலர்ப்பூங்காவும்பொய்கையுநான்மறையும்
நாகஞ்செறிதமிழ்த்தேவையர்கோன்ரகுநாதன்வெற்பில்
நாகஞ்செறிகின்றதென்மதிசாயநற்பார்வைதன்னை
நாகஞ்செறிவஞ்சியாய்மறைத்தாயதுநன்றலவே. (கச)

மாவானசூரனிருப்பையெல்லாமத்திவாய்க்குதவுந்
தேவானவனைப்பணிரகுநாதன்சிலம்பிலென்மேற்
காவானபைங்குழலீர்படிறோவென்றுகைகளினாற்
பூவானதுந்தடுத்தீர்விடுத்தீர்பொற்பொருப்பினையே. (கரு)

தார்கொண்டபாடலம்பேரோடையாம்பறருங்கமலச்
சீர்கொண்டசெங்கரத்தான்ரகுநாயகன்றேவைவெற்பி
லேர்கொண்டநீல்மடலேறுகைபெரிதீனமன்றோ
வார்கொண்டகொம்மைப்புளகப்படாமுலைவஞ்சியர்க்கே. ()

தன்னம்புயத்திற்குவலயந்தார்முல்லைதாங்கிமன்னர்
சின்னம்பழித்தரகுநாதன்றேவைச்சிலம்பிலின்று [கண்டாற்
பொன்னங்குடத்தையெதிர்கண்டலென்னமைப்போலுங்
கன்னங்கறுத்தகுழலாய்நற்காரியங்கைப்பலனே. (௧௭)

செந்தாதும்பூவுஞ்சுருதிவண்டார்ப்பத்தினம்பொழியு
மந்தாரமன்னகையான்ரகுநாதன்மழவையன்னீர்
நந்தாமணம்பெறவந்தேனுக்கின்றுநறியமல
ரந்தாமரைபொளித்திரளித்திட்சிற்றரும்பிணையே. (௧௮)

பாரேழ்கழனியும்வாடாதுதன்மப்பயிர்விளைக்குங்
காரேயனையரகுநாதன்றேவைக்கனங்குழையீர்
நீரேபொறிவெம்படநாகங்கைவிட்டுநின்றுவெய்ய
சூரேபுரிகஞ்சமெவ்வாறுகையிற்றொடுகின்றதே. (௧௯)

யாழுங்குழலும்பகற்கேனும்பாகுமிசைந்துகுடி
வாழுந்திருமொழியாய்ரகுநாதன்மணவைவண்டு
சூழுங்களபமுலையானைமுன்னித்துயர்க்கடல்வாய்
வீழுங்கொடுமையெல்லாங்கண்டிலார்செங்கைவேலவரே. ()

நீலக்கரும்புயற்றராகணம்வெண்ணிலாவணிந்து
ஞாலத்துவந்தமின்னேதளவாய்ரகுநாதன்வரைக்
கோலத்தினைக்குளினமென்றுமானினங்கூடுமென்றோ
சாலப்புதைத்துநின்றாய்செங்கண்வேழந்தருங்கொங்கையே.

சேயென்றுவந்ததளவாய்க்குநாவலந்தீவிற்குமோர்
தாயென்றுவந்தரகுநாதன்றேவைத்தமிழ்வரைமேற்
காயென்றுவில்வக்கனியளித்தீரென்கலைமதிக்கு
வாயென்றுசற்றுமலராதுபாணிக்குண்மைம்மலரே. (௨௨)

கோட்டந்தவிர்த்தகுடைமன்னர்கேசரிகூட்டமன்ன
ராட்டந்தவிர்த்தரகுநாதன்வெற்பிலென்னாருயிர்க்கு
வாட்டந்தவிர்த்தவரிவிழியாளைமறைத்தருளி
னீட்டந்தவிர்ப்பதென்னோகுன்றவாணரிளங்கொடியே. (உ௩)

ககராசவீரவெங்கேதனத்தான்கந்தமாதனப்பொன்
னகராசன்வீரைக்கிறைதளவாய்ரகுநாதன்வரைச்
சிகராசலத்தின்மலராதநீதெளிந்துகொண்டோ
மகராலயத்தின்மலரைவைத்தீர்செம்மலர்க்கஞ்சமே. (உ௪)

கம்பக்கருணையந்தேனூறுஞானக்கனியருள்சே
ரும்பர்க்கரசனையான்ரகுநாதனுயர்வரைவாய்
விம்பக்கனியிதழீர்மணிமார்பில்வெங்கோடுடைய
கும்பக்கரிகொடிதாம்விலக்கீர்மதகுஞ்சரமே. (உ௫)

தொடைபெற்றகொண்டல்பிறையிளநீர்சுமந்தோதிமத்தி
னடைபெற்றகன்னிக்கரும்பனையாய்ரகுநாயகன்வேற்
படைபெற்றசெங்கையும்வேழமுமாய்நிற்றல்பார்த்துமதிக்
குடைபெற்றவெய்யவனெய்யவன்போர்க்குறிகொண்டனனே.

கீதங்குழல்கஞ்சய்வீணைதடாரிகிளந்தபஞ்ச
நாதஞ்சிலம்பியதேவையர்கோன்ரகுநாதன்வரைக
காதங்கமழ்குழலீரெனதாவிகலக்கில்வரு
மேதம்பெய்தென்னவோமறைத்தீரின்றிணைக்கயலே. (உ௭)

பண்மூடியசெங்கனியிதழீரெழுபாரகத்தன்
னுண்மூடியபுகழான்ரகுநாதனுயர்வரைவாய்க்
கண்மூடியோகியர்போலநின்றீரிக்கருத்தினுக்கு
விண்மூடியவ்வரைகைவிடிலேதம்விளைவிக்குமே. (உ௮)

மேகந்தருமணிவெண்முத்தராசியின்மென்மலர்ப்புன்
னாகந்தருகடற்றேவையர்கோன்ரகுநாதன்வெற்பி
லேகந்தருபதின்மூன்றொன்பதான்மறைத்திங்குநின்றி
ராகந்தருமைந்துமொன்பதுமேவெளியாகியதே. (௨௯)

பாவாய்நிறைகின்றசெம்பொருளோடுநற்பைம்பொருளு
நாவாய்தருகடற்றேவையர்கோன்ரகுநாதன்வரைப்
பூவாய்மனுமுறைபாலெமைவாழப்புரக்குமிளங்
கோவாயவரையிறைமறைத்தாலதுகொள்கையன்றே. (௩௦)

வில்லிளங்காளைமயில்காப்பமானைவெகுண்டெழுந்த
நல்லிளங்கேசரிதேவையர்கோன்ரகுநாதன்வரை
வல்லிளங்கோலமணிமுலைசாலவருத்தும்வண்டு
புல்லிளங்காமர்விரிந்தசெங்காந்தட்புதுமலரே. (௩௧)

கல்லொன்றிரண்டிளநீர்தாங்கிமுன்வரக்கண்டுமுனி
சொல்லென்றுநின்றரகுநாதன்றேவைச்சுரும்பின்மணி
வில்லொன்றுவாணுதலீர்செப்பினூடத்தமேவுமல்லா
லல்லொன்றுநீலக்கடலூடுசேர்ப்பதழிவின்மையே. (௩௨)

பண்ணார்குதலைக்கனிவாய்ச்சிவந்தபசுங்கிளியீர்
நண்ணார்சமரிற்புலிநளவாய்ரகுநாதன்வரைக்
கண்ணாரிணைக்கயன்மங்கலமாமெனக்கைக்கொண்டநீர்
தண்ணார்தரளமணிக்கும்பநீக்குதறக்கதன்றே. (௩௩)

சந்தேறியதடஞ்சாரலிலாயிரந்தண்மதிபோ
னந்தேறியகந்தமாதனத்தான்ரகுநாதன்வரைக்
கொந்தேறியமலர்வாள்புனைந்நீர்மதகுஞ்சரந்தேன்
வந்தேறியமொழியீர்புனைவீர்செங்கைமாமலரே. (௩௪)

கார்பூத்தபுன்னைவெள்ளோதியஞ்சேதரன்கைவளைபோ
லேர்பூத்ததேவையர்கோன்ரகுநாயகனேமவெற்பில்
வார்பூத்தபூண்முலையீரதிந்தாய்ந்துமணப்பதற்கோ
தார்பூத்தசெங்கையிலேந்திநின்றீரின்பசாகரமே. (௩௫)

பால்வாய்ப்பசுந்தமிழ்வீசியவாசம்பரந்தவைகைக்
கால்வாய்த்தவிரையர்கோன்ரகுநாதன்கரந்தைவெற்பின்
மேல்வாய்த்திருந்தவெழுத்தாறரிதின்விளங்குமென்றே
நூல்வாய்த்தநுண்ணிடையீர்மறைத்தீரணிநோக்கினையே. ()

ஆவியும்பூவுந்தராமுன்பேதனுமணிந்துநறு
காவியுஞ்சேர்குழலீர்தளவாய்ரகுநாதன்வரைக்
காவியங்கைபுனைந்தீர்விடுத்தீர்தனங்கஞ்சமலர்த்
தேவியும்போலநின்றீர்விருப்பேதுங்கள்சிந்தனைக்கே. (௩௭)

வாவிக்குளொற்றைவனசமென்றேறுமைவாணிலங்கும்
காவிச்செழுங்குடையான்ரகுநாயகன்காவிரிகாட்
டாவிக்குயிர்தந்தகோட்டீர்தொழுதனமப்படிநீர்
சேவிக்கநல்குங்கமலாலயமுக்திசித்திக்கவே. (௩௮)

சங்கேகொடைத்தருவேயெனவாழ்வுதருங்கருட
வெங்கேதனத்தளவாய்ரகுநாயகன்விரைசுற்றும்
பங்கேருகத்தனமேயொளிசேர்தனபாரமலை
யிங்கேயிருக்கக்கடலேறினரென்னிறையவரே. (௩௯)

கன்னித்திரைச்சங்குமிப்பியுமீனுங்கராவுமொளிர்
நன்னித்திலஞ்சொரிதேவையர்கோன்ரகுநாதன்வெற்பின்
மின்னிற்சிறந்தமின்னேசரிக்கோட்டுவெண்முத்திருக்க
மன்னித்திகழ்கஞ்சமுத்தமென்றேனைகவலைகின்றதே. (௪0)

போரயிஞகம்புலிசிலைவாள்வெம்பொழிவழங்கு
மாரெயில்வீரையர்கோன்ரகுநாதனணிவரைக்கு
ணீரரஞகியமைவேலைகைக்கொண்டநேரிழையீர்
பேரரஞணகிரிதுர்க்கநீக்குதல்பெண்புத்தியே. (சக)

திரையோங்குபாற்கடற்பூந்தாமரைச்செழுந்தேனிருக்கும்
வரையோங்குமார்பன்ரகுநாதன்றேவைமணிவரைமேல்
விரையோங்குபங்கயந்தாங்கியநீரிருவெற்பொளித்தா
லுரையோங்குவிண்மணியெண்மணிநீரென்றுரைசெய்வரே.

மதிசேரமுதவிதழியஞ்சிதளவாசவைகை
நதிசேர்தெளிபுனல்வீரையர்கோன்ரகுநாதன்வரைப்
பதிசேரிளமுலைசங்கிலிகாட்டும்பணியணிந்தாய்
துதிசேர்பரவையுங்காட்டிலென்போலில்லைசுந்தரனே. (சங)

முள்ளார்வெங்கானந்திரைவரைவானமுகடுசென்று
நள்ளார்புகவெஞ்சிலைகுனித்தோன்ரகுநாதன்வரைக்
கள்ளார்கருங்குழலீர்கொடுங்கூற்றையுங்கையமைத்தீர்
புள்ளார்தமைவிலக்கீரெமைவாழ்ப்புரக்கிலின்றே. (சச)

போற்றுங்கமடம்பணிகுலநாகம்பொறுத்தசுமை
யாற்றும்புயவரையான்ரகுநாதனணிவரையீர்
தோற்றுங்கயலைமறைத்தீர்பொற்கஞ்சமுந்தோற்றுவித்தீர்
சாற்றும்பொழுதினினீரோமதுரைத்தடப்பொய்கையே. ()

நறைபெற்றமாலைக்கதிர்வேலுமாலுமெந்நாளுஞ்செவ்வி
யுறைபெற்றதேவைரகுநாதன்வெற்பிலென்னுள்ளமென்னுங்
குறைபெற்றதாருவைமைந்நீலவண்டுகுடைந்துதிரா
திறைபெற்றபோதகைத்தீர்வந்துசாய்க்குமிபக்குன்றமே. ()

ஆடகமாமதில்வீரையர்கோன்வண்டலம்புமுல்லை
யேடலர்மாலிகையான்ரகுநாயகனேமவெற்பிற்
றூடகமேவுகைக்கொண்டூர்குவலயந்தோகையன்னீர்
கூடலைவேண்டிவந்தேனளித்தீர்பரங்குன்றினையே. (௪௭)

கங்கமுஞ்சீனமுஞ்சோனகநாடுங்கலிங்கமும்போர்
வங்கமுஞ்சேர்முன்றிலான்ரகுநாதன்டணவைவரைச்
சிங்கமுஞ்சாயவருகரிப்போரிலென்சிற்றுயிரு
மங்கமுந்தேய்வதுபார்த்திரங்காததென்னாரணங்கே. (௪௮)

நூலுந்துடியுங்கொடிமின்னுநாகமுநுண்மதியும்
போலுந்தளரிடையாய்ரகுநாதன்புனற்கரந்தைச்
சேலுங்கமலமுங்காவியுமாவுந்தெவ்வேந்தைவென்ற
வேலும்பொருவும்விழியையெந்நாட்கண்டுமேவுவனே.

மல்குங்கிரணமணிசெம்பொன்வாரிமருங்கிருபா
னல்குந்திரைவைகைநாடனெங்கோன்ரகுநாதன்முறைப்
புல்கும்பதியில்விசும்பிடைநீண்டுபுகுதருமீ [ே.த.
னொல்குந்துடியிடைதோற்றுதென்றேவின்றொளிக்கின்ற

மகக்கண்ணிற்சீலமறையோரைவாழ்வித்துவான்கொணர்ந்
சகக்கண்ணிற்சேர்த்தரகுநாதன்றேவைச்சயிலமன்னீர் [து
முகக்கண்ணிற்காண்டலரிதென்பதோவிழிமூடியன்பா
லகக்கண்ணிற்காணப்பதிநோக்கினீர்நன்றறிவுமக்கே. (௫௧)

மலைவேலிவையம்புரந்தசெங்கோன்மனுராசன்மனுக்
கலைநூறெரிந்தவெங்கோன்ரகுநாதன்கரந்தைவெற்பிற்
றொலையாதிருந்தெம்மனத்தூடுந்தோன்றுந்துயர்தொலைக்கக்
கொலைவேலிருந்தகையாற்குறிப்பீர்மணிக்கொம்பினையே. ()

தேசிகப்போதணிசண்பகக்காடுதிருந்திழையார்
நாசியொப்பாமலர்விரையர்கோன்ரகுநாதன்வரைப் [ஈற்
பாசிழைப்பூவைமுகைக்கோங்கில்வேடன்கைப்பாணமுற்
காசினிப்பாலுனைப்பாலையென்பார்கலைகற்றவரே. (௫௩)

முகைகாட்டியமுன்பின்முல்லைநல்லார்தம்முகமதிவெண்
ணகைகாட்டியபுகலூர்த்தளவாய்ரகுநாதன்வரைத்
தகைகாட்டியசெவ்விளநீரிலம்புயஞ்சாரிலகிற்
புகைகாட்டியகுழலுன்போகிநீயும்புனலுலகே. (௫௪)

ஆடியகோணகையன்னார்முகம்போன்மதியம்பொனையில்
சூடியகாணைப்பதிரகுநாதன்சுரும்பில்வள
நீடியபெண்ணைக்குருப்பைகண்டேன்மலர்நெய்தல்கண்டால்
வாடியசிற்றிடையீருமைப்போலுமணலுலகே. (௫௫)

கொத்தார்குழலியர்கண்டமொப்பவெழில்கொண்டமுத்தி
னத்தார்கரந்தைரகுநாயகன்செம்பிநாட்டுவரை
முத்தார்மருப்பிற்கருவிளங்காணின்முளரிமல
ரொத்தார்மதிமுகத்திருமைக்கார்வெற்புலகென்பரே. (௫௬)

தொடைகாட்டும்பூங்குழலார்நடைபோலிளந்தூவியன்ன
நடைகாட்டும்வைகையம்பூந்துறையான்ரகுநாதன்வெற்பி
லிடைகாட்டுநூல்வெற்பிளமுலைகாட்டுமிளங்கொடியீர்
படைகாட்டுமைவிழிகண்டுரைப்பேனிப்படியென்னவே. ()

பூவளர்வாவிக்கடலெழும்வீதியும்பொன்மனையு
மாவளர்தேவைப்பதிரகுநாதன்மணிவரைமேற்
கோவளர்தானத்தினங்கன்றுசேர்கைகுழித்தமைத்தீர்
காவளர்பூவைக்கரசுமைப்போலெவர்காசினிக்கே. (௫௮)

அறங்காவல்கொண்டமனுமுறைபாலணிநாவசைந்து
கறங்காமணிமுன்றிலான்ரகுநாதன்கரந்தையன்னீ
ருறங்காதவெங்கண்மதகரிபாரநெஞ்சூடுருவிப்
புறங்காணிலார்பொறுப்பார்பிணைபாயப்பொறுக்கினுமே. ()

நங்காமனேதனுவெனவந்தகார்செம்பிநாடனுயர்
செங்காவிபங்குடையான்ரகுநாதன்சிலம்பின்மிக்க
வெங்காயவெய்யவிடாய்க்கிளநீர்தந்துவெவ்விடத்தை
யங்காமவல்லிநல்லீர்மறைத்தீர்நன்றறிவுடைக்கே. (௧௦)

நிலையேந்துமாளிகைமாளிகைமாதர்கணெஞ்சமதிக்
கலையேந்துந்தேவைரகுநாதன்வெற்பில்வெங்கள்ளைவரிச்
சிலையேந்தும்வாணுதலீரங்கைநீயேந்துஞ்செபமிதென்றே
விலையேந்துமாணிக்கவள்ளமிங்கேவைத்துமெய்ம்மறந்தே. ()

பொற்பணைவேழம்புரவிவெள்ளோதிமம்பூவையர்தோ
ணற்பணையேயுங்கரந்தையர்கோன்ரகுநாதன்மணி
வெற்பணைவாழ்வெமதென்றேமறைத்துமைவேலைவளர்
கற்பணைதோகைமயிலேவரைவளங்காட்டியதே. (௧௨)

வீரைக்குள்வந்தசிந்தாமணிநீதிவிளங்கவெழு
பாரைப்புரந்தரகுநாதன்வெற்பிற்பகலில்விண்சேர் [டோ
தாரைக்குலம்புவிகாணவொண்ணாதெனுந்தன்மைகொண்
வாரைச்சுமந்தகனத்தாய்நின்செங்கைமறைக்கின்றதே. ()

வழியும்பிரசமலர்முல்லையான்வையமேழும்பொய்யும்
பழியுந்தவிர்த்தரகுநாதசேதுபதிவரையீர்
மொழியுங்குவலயம்பாணியினாலின்றுமூடவந்து
கழியுந்திரையுங்குமிழியுந்தோன்றித்துயர்செய்யுமே. (௧௪)

சத்தந்தெளிக்குங்கலைவாணர்சங்கத்தமிழ்க்குருகிச்
சித்தங்களிக்கும்ரகுநாதன்றேவைச்சிலம்பின்மணி
முத்தம்பதிக்கும்பவளச்செவ்வாயிளமூரன்மின்னே
யத்தந்தனக்குக்கடல்பொருந்தாதென்பராய்ந்தவரே. (௬௫)

மூங்கீர்சொரிமுத்தமாணிக்கராசிமுகந்தருவி
நன்னீர்சொரிகந்தமாதனத்தான்ரகுநாதன்வரைப்
பொன்னீர்பவளத்தமும்தமக்கீயும்பொழுதினஞ்சு
தன்னீர்தருமெனவேமறைத்தீர்செழுந்தாமரைக்கே. (௬௬)

மானார்விழியெனமைந்நீலம்பூத்தவயற்புகலூர்
ஞானகரனிசைசேர்தளவாய்ரகுநாதன்வரைக்
கானார்கருங்குழலீர்சுறவார்கடல்கைப்படுத்தி
ரானல்விடுத்ததென்னீர்வரையிழுத்தகலிடமே. (௬௭)

நல்லார்நகைக்குப்பனைவளர்தாளிநனைமலரு
மல்லார்கரந்தைரகுநாதன்றேவைவரையின்மணிக்
கல்லார்கனங்குழையீர்மருண்டீரின்றுகண்டசர
மெல்லார்வரிவளைக்கைபுனைந்தீர்குருகெய்தவுமே. (௬௮)

ஆரியர்போற்றுமிராமேசர்தாளிணைக்கன்புவைத்த
சூரியன்வீரையர்கோன்ரகுநாதன்சுரும்பிலின்று
கூரியவாளிரண்டுங்கையிலேந்தியகொங்கையிளங்
காரிகையீருமைமாதங்கியாரென்பர்கண்டவரே. (௬௯)

வாளும்பரசும்வயிரமுமேகொண்டுமாற்றலரை
யாளுந்தனிவடிவேல்ரகுநாதனணிவரையீர்
தோளுங்கரும்புமெனதாருயிர்வந்துகுறைகொள்ள
நீளுங்கணைகொண்டுநின்றலெவ்வாறுயிர்நிற்கின்றதே. (௭௦)

இலையேதழைத்துக்கொழுங்கனல்பூத்திகல்காய்த்துவெய்ய
கொலையேபழுத்தசெவ்வேல்ரகுநாதனைக்கூடலர்போன்
மலையேயெனக்களித்திர்கடலேறுகைவாய்த்துமின்றீர்
சிலையேயபடைத்தநுதலீர்திகைத்ததென்சிந்தனையே. (எக)

நெய்வாய்த்திகன்மன்னர்சோரியின்மூழ்கிநிணமருந்து
மைவாய்த்தவேற்படையான்ரகுநாதன்மணவையன்னீர்
மெய்வாய்த்தகோலவனமுலையார்தம்மைவிட்டெனைக்
கைவாய்த்தமைவிழியாருடன்சேர்தல்கடனல்லவே (எஉ)

செம்பேந்தியமதில்விரையர்கோன்முச்செகபனைந்து
நட்பேந்திவாழுமனுமுறையான்ரகுநாதன்வெற்பி
லம்பேந்திநிற்பதுங்கண்டேனினியுன்றனங்கையினாற்
கொம்பேந்திநின்றென்னிடையூறுதீரக்குறிக்கொள்ளுமே.()

பாவுக்கிசையும்பெயரேபுனைந்துமெய்ப்பாவலர்தந்
நாவுக்கிசையும்பெரும்புகழான்ரகுநாதன்வரைக்
கோவுக்கிறையின்றளித்தீரெமக்குக்கொடுத்தவிரு
மாவுக்கிறையிலிசெய்தீர்புகழும்வகையறிந்தே. (எச)

தாருஞ்சிலையுங்கலவையும்பூணுந்தருந்தருவுங்
காரும்பொருவுகையான்ரகுநாதன் கரந்தையன்னீர்
வாருந்துவண்டமருங்குலுநாணும்வருந்தலைநீர்
பாருங்கொடிதுகொடிதுகண்டீரிப்பணைமுலையே. (எரு)

கார்த்தலந்தோயுங்கொடிமதில்சூழுங்கரந்தையர்கோன்
பார்த்தலம்போற்றும்ரகுநாதன்வெற்பிற்பசுங்கதிர்ப்பூண்
சேர்த்தலங்காரித்தமின்னேயினிமைச்செந்தேனிங்ஙனேன்
கூர்த்தலங்கைத்தலமேவியவாறுகொடுமையின்றே. (எசா)

படற்கைதகைசுற்றுந்தேவையர்கோன்வயமன்னர்க்கெல்லா
மடற்கேசரிதளவாய்ரகுநாதனணிவரையிர்
விடற்கேதுணிவுற்றிருநாகமும்வெளிவிட்டுவெங்கட்
கடற்கேதிருநெடும்பூட்கைதந்திரென்னகாரணமே. (௭௭)

மேவியதூதின்மெலிவுரைத்தேயன்றுமெய்த்தரும
னேவியமேகம்ரகுநாதன்றேவையிலெண்டிசையுந்
தாவியசெங்கண்மடப்பிணைக்கேயிறைதாவவுயி
ரோவியநீகொடுத்தாலென்செய்யாதிவ்வுலகிணையே. (௭௮)

சொற்பெறுபெற்றதளவாயெனுந்துரைராயனரு
ணற்பெறுந்தேவைரகுநாயகன்செம்பிநாட்டினுயர்
வெற்பெறவிட்டுத்துணையார்கண்ணேணிவிரைந்தொளித்தா
லற்பெறுநெஞ்சமினியென்படாதுபெண்ணாரமுதே. (௭௯)

கோங்கார்முகிழ்முலைக்கொம்பரன்னீரண்டகோளமெல்லா
நீங்காதமெய்ப்புகழான்ரகுநாதனெடுங்கரந்தைப்
பாங்கார்கொடிக்கயமூங்காவின்றீர்தண்பயோதரத்தே
றிங்காந்தளையிடலாங்காண்மதிகுலத்தென்னவரே. (௮௰)

தூதேநடந்தகவிகுலமாமணிதான்றுகொடி
யீதேயுயர்த்தரகுநாயகன்றமிழ்விரையிலிப்
போதேவனத்தினிறைகங்கைமேவப்புரிந்தகனூன்
மாதேயுனையுஞ்சொலலாம்ரவிகுலமன்னனென்றே. (௮௧)

செய்க்கஞ்சனந்தம்பயில்செம்பிநாடன்சினவடிவேற்
பொய்க்கஞ்சனந்தப்பொருரகுநாதன்பொலங்கிரிமேன்
மெய்க்கஞ்சனந்தகுழன்மேனயதிசயமெல்லியின்
கைக்கஞ்சனந்தங்கவிங்கெனக்கேதனங்கண்ணுற்றதே. ()

கண்டேயெனுஞ்செங்கனிமொழியிர்சிலைக்கார்விசயன்
றிண்டேர்கடவும்ரகுநாதன்வெற்பிற்செந்தாமரைமேற்
கொண்டேகுவளையிருத்தல்கண்டேனக்குவளையின்மேல்
வண்டேய்கமலமுங்கண்டேனிதுவென்னமாயங்களே. (௮௩)

நீதநந்தாதுதளவாய்குமாரனெடுங்கருட
கேதனங்கொண்டரகுநாதன்றேவைக்கிளர்ந்தகந்த
மாதனங்கண்டுவந்தேன்றனுக்கோடிவளைகடலைப்
போதனம்போனடையிர்கண்டுநானுடல்பூரிப்பதே. (௮௪)

ஞானிடமானமுனைவேற்பகைதிகைத்தோடிநெடுங்
கானிடமாகவென்றோன்ரகுநாயகன்கந்தகிரித்
தேனிடயாமொழியிர்கணைப்போதிற்செறிவிலங்கை
மானிடமாக்கிவிட்டவருமைப்போலெவர்வல்லவரே. (௮௫)

கானேர்பொருப்புமருவியும்போற்கமழ்முல்லையந்தார்
தானேவிளங்கும்புயரகுநாதன்றமிழ்க்கரந்தைத்
தேனேவளவனிலைமைவிட்டேசென்றுதென்பொதிய
மானேரடைதனன்றேபுண்டரீகமணிக்கொடியே. (௮௬)

சீலத்துமிக்கதளவாயளித்தருள்செல்வனொரு
காலத்தும்பொய்யுரையான்ரகுநாதன்கரந்தைநகர்
போலத்துலங்கும்பொலங்குழையிர்சென்றுபூம்புனறோ
யாலத்துமாந்தளிர்கண்டோமிதுவென்னவற்புதமே. (௮௭)

நடப்பதுமாலயமாதனையாய்நடைகற்றவன்றே
கொடுப்பதுங்கற்றரகுநாதன்றேவைக்குவட்டின்மத
னெடுப்பதுமெய்வதும்பாராய்வளைதருமிக்கையினி
லடுப்பதுங்கஞ்சத்தரும்பாகும்வேளுக்கழகல்லவே. (௮௮)

மெய்ம்மலராசனமின்ஞன்மிதிலையில்வில்வளைத்த
கைம்மலர்மேகந்துரைகுநாதன்கரந்தைவெற்பிற்
செம்மலர்மேவுந்தேனுளதேயன்றித்தேனிடத்தி [கே. ()
லம்மலர்தோற்றுங்கொல்லோசொல்லுவாய்முல்லையாரணங்

வணங்காதகெல்லைப்பொருமால்சொரிமுத்துவன்னியன்
னணங்காருமார்பன்ரகுநாதன்றேவையணிவரைமேற் [பொன்
குணங்காதலிக்குநெடுமீனந்தன்னுடன்கூடியத்த
மிணங்காதிணங்குமழியாதகன்னியிளம்பிடியே. (க௦)

முறையுந்தருமமுநீங்காதமான்மும்முரசுமன்னர்
திறையுந்தருமுன்றிலான்ரகுநாயகன்றேவைவெற்பி
னிறையுங்கமலத்திருப்பதல்லாலிந்திரநீலத்தின்மே
விறையுங்குடிபுக்கிருப்பதுண்டோபுவியேழினுமே. (கக)

கலைக்கேநெடுங்கடலன்றுடைக்கலங்காத்தவன்செஞ்
சிலைக்கேவிசயன்ரகுநாயகன்றமிழ்த்தேவையிலா
விலைக்கேகருங்கொழுந்தேந்துமின்னேகுன்றியற்கையன்றே
வலைக்கேவளர்வதென்றேசங்கபாணியமர்கின்றதே. (கஉ)

பணையேதடங்கண்டுயிலாதவிரைப்பதியுரக
வணையேதுயிலும்ரகுநாதன்வெற்பிலென்றன்னுயிர்க்குத்
துணையேயுனைவந்திரந்தேற்குவெந்துயர்தோன்றவடிக்
கணையேபிடித்துச்சிலைவிடுத்தாய்கற்றகல்விநன்றே. (கங)

நெய்க்கின்றகூந்தற்கொடியிடையீர்மனுநீதியினன்
மெய்க்கின்றவாய்மைரகுநாயகன்கந்தவெற்பிலிப்போ
துய்க்கின்றமான்மழியும்புண்டரீகமுமோரிடைநீர்
வைக்கின்றநீதியினிலிணையோவஞ்சிமன்னனுமே. (கச)

பிறியாதசெவ்வர்க்கும்பின்னிட்டபேர்க்கும்பிறங்கிலைவே
லெறியாதவன்ரகுநாயகன்றேவையிலென்றுங்கண்டே
யறியாதசிற்றிடையீர்பொருந்தாரையடக்கியபின் [யின்றே,
பொறியாறுவிட்டதென்றேபொழிசூழ்ந்தபொற்கோட்டை

காரணவுங்கொடைவீரையர்கோனன்றுகஞ்சன்விட்ட
வாரணம்வென்றரகுநாதன்வெற்பின்மனைக்குறிபோந்
தோரணமுத்தத்தொடைமாவிளந்தளிர்தோன்றவெதிர்
பூரணகும்பம்வைத்தாய்மலர்வீட்டிற்பொலங்கொடியே. ()

அலம்பணிவீரைபுடைசூழும்வீரைக்கதிபனெழு
தலம்பணிதேவையர்கோன்ரகுநாதன்றமிழ்க்கரந்தைப் [ஞர்
புலம்பணிமேகலைப்பொன்னேமறந்துங்கைப்போதின்மின்
சிலம்பணியாரென்பதோவரிபாய்வண்டுசேர்க்கின்றதே (௯௭)

நிதிகொண்டவண்மைத்தளவாய்குமாரனிலந்தழைக்குந்
துதிகொண்டதேவைரகுநாதன்மால்வரைத்தோகையன்னீர்
கதிகொண்டதாமரைதாங்கிநின்றீர்செங்கலசவிப்ப
மதிகொண்டுதாங்குமின்மாலாமெனக்கலர்மாதென்னவே. ()

மழையணிவார்குழன்மின்னிடைமாதர்மருளவிசைக்
கழையணிதேவைரகுநாதன்வெற்பிற்கதிரொளியோ
டிழையணியாழின்விரலாலிசைத்துள்ளுருக்குதலாற்
றழையணிகாளத்தவரேனும்வாய்மைதருமுமக்கே. (௯௯)

முத்திக்குவேலிதழைக்கின்றதேவைமுதல்வனருட்
பத்திக்குவாய்த்தரகுநாதசேதுபதிவரைமே
லெத்திக்குங்கண்டறியோமணங்கேபச்செனுங்குழைசே
ரத்திக்குஞ்செம்மலர்காட்டிநின்றாயின்றதிசயமே. (௧௦௦)

மையாழிவைப்புகழ்செம்பிராடன் மறந்தும்பொய்யா
மெய்யாளினங்குமரகுநாதன் வெற்பில்வெங்கோவடையக்
கையாரவேலின்றிசைத்திடக்குன்றங்கவிகைசெய்தாற் [யே.
பொய்யாதுணைச்சொல்லெலாங்கண்ணுறென்றுபூங்கொடி

பலவுங்கமுகும்பசும்பணிக்கோடும்படைத்துநின்று
நிலவுங்கரந்தைரகுநாதன் காக்குநெறியியல்பா
மிலவுந்துகிரும்பொருயிதழாய்நின்னிருகையினுங்
குலவும்படிசெங்கதிர்மாமழையேந்திக்குலாவுவதே. (௧0௨)

காக்குங்கருணையுங்கல்வியும்வாழ்வுங்கவிமதுர
வாக்குந்தழைத்தரகுநாதன்றேவைவருவிருந்தாத்
தேக்கும்படிகனிவாயமுதாரவந்தேற்கினிமை
நோக்கத்தணைமறைத்தாலியல்போவஞ்சிநுண்ணிடையே. ()

பன்னுந்தமிழ்ப்பயிர்வாடாதுமாரியிப்பாரின்முத்தும்
பொன்னுஞ்சொரியும்ரகுநாதன்றேவைப்பொருப்பினுயர்
மன்னும்பெரியவரைநீத்தாலுகண்மருவுகையாற்
பின்னுங்குழலணங்கேயழிக்கேதுவுன்றன்பேதைமையே. ()

தெளியேபகவொண்குடைதன்னாற்குளிர்செகமேழுமிசை
யொளியேபரவும்ரகுநாதன்றேவையிலோங்குபசுங்
கிளியேயெனுமொழியீரிரங்காதின்றுகேழ்கிளர்தண்
ணளியேமறைத்ததனாற்கொடியாரென்றழிந்தனமே. (௧0௫)

வேரிப்பசுந்துணர்வார்குழலீர்கலிவெப்பொழிக்கு
மாரிப்பருவம்ரகுநாதன்றேவையில்வண்குடத்தே
பூரிப்பநெஞ்சிற்கருதாமனஞ்சிற்புரிந்ததுனை
நீரிப்படிக்கலந்தாற்பிழிதேதுநிகழ்த்துவதே. (௧0௬)

ஆர்க்குங்கலாபமயிலனையீர்பகிரண்டமெல்லாம்
போர்க்கும்புகழ்தளவாயரகுநாதன்பொருப்பிலணி
சேர்க்குந்தனங்கண்மலைபோற்கண்டுமுடித்திறக்குமுன்னே
பார்க்கும்படியிப்படிக்கண்டிலேமொருபாரினுமே. (௧0௭)

திளைக்களிவண்டிசைபாடத்தானந்தினம்பொழியுங்
கவளக்கடாசலத்தான்ரகுநாதன்கரந்தையன்னீர்
தவளக்குளிர்முத்தமல்லாமலத்தந்தணிற்சிறந்த
பவளக்குலமும்படினுண்டோமலர்ப்பங்கயத்தே. (௧0௮)

ஒன்றுருயிர்விடச்செங்கையில்வேலையுறைவிடுங்கைப்
பொன்றொடர்தாருரகுநாதன்றேறனைப்பொலங்கிரிவேள்
வின்றுண்மறைத்தகரும்பனையீரந்தவேள்வனச
வன்றுண்முகையென்கொலோவிணையேனுயிர்வாட்டுவதே. ()

சினத்தாமரையரெல்லாந்தனையேதொழச்செங்கடுக்கை
யினத்தாமரைத்தொழுமால்ரகுநாதனையெண்ணலர்போங்
கனத்தாமரையிருள்வார்குழலீர் கட்கருஞ்சுரும்பென்
மனத்தாமரைபுகுமென்றேனையாரமறைக்கின்றதே. (௧௧0)

தரியார்வணங்குந்தளவாய்குமாரன்செந்தாமரையாள்
பிரியாததேவைரகுநாதன்வெற்பிலென்பேரறிவாம்
விரியாழிமாயக்கயல்குடியாதுவிலக்கியபின்
கிரியாலுழக்குதனன்றேமழலைக்கிளிமொழியே. (௧௧௧)

சீதக்கமலவயற்றேவைகாவலன்செந்தமிழுஞ்
சீதக்கலையும்வல்லான்ரகுநாதன்கிரியினெடுங்
காதற்கடல்வெள்ளநீந்துதற்கேகுடங்காட்டியநீ
பேதக்கவலையொளித்ததென்றேபுகல்பெண்கொடியே. (

மொய்தோய்பகைஞர்வரையுரம்பாய்ந்துமுழைப்படுத்துங்
கைதோய்கடாசலத்தான்ரகுநாதன்கரந்தைவெற்பின்
மெய்தோயயின்றவுயிர்வாடுமென்பதும்விட்டிங்ஙனே
மைதோய்மழைக்கண்மறைத்தனன்றோசிலைவாணுதலே. ()

வயத்துக்கிசைந்தபுகழ்களவாய்த்தந்தைமைந்தன்மிக்க
செயத்துக்கொருதுங்கவேள்ரகுநாயகன்றேவையிலம்
புயத்துக்குவலயந்தார்புனைந்தீரிப்பொறையமைத்தா
ணயத்துக்கருமனென்றேபடவீர்சொல்லுநானிலமே. ()

சேல்கொண்டநீலக்கடல்சிவப்பேறச்சிலைதிணித்துக்
கால்கொண்டதேவைரகுநாதன்வெற்பிற்கருவிளம்பூ
மேல்கொண்டகாந்தட்குலத்தோடுங்கூடவிளங்கிழையீர்
மால்கொண்டகாலத்துமென்றோமணக்கமலர்ந்திலவே. ()

திரைவந்தமுத்தும்வரைவந்தபொன்னுந்தெவ்வேந்தர்தந்து
நிரைவந்துபோற்றும்ரகுநாதன்றேவையினேரிழையீ
ருரைவந்துதேற்றவுணர்ந்திரென்னெஞ்சமுழலைவைத்த
வரைவந்தலரியென்கண்ணுனதென்னகண்மாயமிதே. (கக௬)

வெங்கயங்கேதம்பொருந்தாதருள்புகழ்வேந்துயர்த்த
செங்கையங்கேதனமால்ரகுநாயகன்றேவைவெற்பிற்
பங்கயங்கேகயம்போல்வீரமுதப்பசுங்கணின்ற
கொங்கையிங்கேவிட்டிருந்ததென்றோதண்குவலயத்தே. ()

சுளைப்பாரமுட்குடமூற்றுசெங்கேதறல்கணைப்பரந்து
திளைப்பார்கரந்தைரகுநாயகன்றமிழ்த்தேவையன்னீர் [ர்
முளைப்பாரையென்றும்புதைக்கப்படாதென்றுமூதுணர்தோ
விளைப்பாரையின்றுபுதைத்தேதனத்தைவிடுகின்றதே. ()

வெங்கத்தழுவுங்கடல்சூழுந்தேவைக்குவாய்த்ததள
சிங்கங்கருணைரகுநாதன்செம்பொற்சிலம்பின்மலர்க்
கொங்கங்கமழுங்குழலீர்முகத்தைக்குமோபானனைச்
சங்கம்பதுமமும்வேண்டுமென்றேகண்ணிற்சார்கின்றதே. ( )

கடந்தோய்மதகளிறன்றனைந்தம்பரகண்டன்முத்து
வடந்தோய்தனத்தியர்வேள்ரகுநாதன்வரையணையீர்
தடந்தோயமுற்களமையாதென்றேநிறந்தாழுமல
ரிடந்தோயவின்றுமதுகரங்கூடியிருக்கின்றதே. (கஉ0)

சீதகங்காதரற்கன்பாம்ரவிகுலசேகரன்பூ
மாதகஞ்சேர்புயத்தான்ரகுநாதன்மணிவரைக்கோ
மேதகஞ்சேர்குழையீரரியாவொடுமெல்லியகைப்
போதகஞ்சேர்ந்தபகையில்லையோவுங்கள்பூம்புனத்தே. ( )

திருபாற்புதுமுத்தார்தொன்றுள்வயிரமுந்தந்துதெவ்வ
ரிருபாற்பரவும்ரகுநாதன்றேவையிலேமவெற்பில்
வருபாற்குறுந்தொடியீருலவாவிந்துமண்டலத்தே
யொருபாற்கரனண்ணினுமென்படாதிவ்வுலகெங்குமே. ( )

நேர்கின்றசிற்றிடையீர்முகிலீருண்ணநீட்டுகைம்மா
வூர்கின்றதேவைரகுநாதன்வெற்பிலென்னுள்ளிரங்க
வார்கின்றவஞ்சனக்கண்மறைத்திரிந்தமாமறைத்தாற்
சார்கின்றபுண்டரிகத்தானுமக்கென்னதாழ்வுமக்கே. ( )

தோடார்பசுங்குழையீர்துரைராயன்சுரந்துநறை
யேடாருந்தாமன்ரகுநாதன்வெற்பிலிரவலர்க்கே
வீடாதுகுன்றத்திசையொளிதோன்றவிரும்பியத்தம்
வாடாதளித்ததனாற்சொல்லலாமுமைவள்ளலென்றே. (கஉச)

அதிராவிருந்தவிருட்குதல்லார்கலியாம்பனிக்குங்
கதிராயுதித்தரகுநாதன்றேறவையிற்கைம்மலர்க
ளதிராயதாணுவிற்கேற்றுலவஞ்சமிமையவர்க்கு
முதிராதநிஞ்சொற்கிளியேயபுணைதன்முறையல்லவே. (கஉரு)

வஞ்சத்திசைமன்னரோடடவாணர்வெறுங்கலியு
மஞ்சக்கனகந்தரும்ரகுநாதனருட்கரந்தை
நெஞ்சத்தின்மாலென்றுணர்த்திக்குடந்தந்துநீர்மலர்ப்பூங்
கஞ்சத்திளந்திருவென்றேநற்பாவையைக்கைக்கொண்டதே

வெல்லும்பதாகைத்தளவாய்க்குமாரன்கைவேழமும்போர்
மல்லுங்கடந்தரகுநாதன்றேறவையில்வல்லவர்க்குப்
புல்லும்படையென்பதோகொலைநாட்டம்புகைமறைத்துச்
சொல்லும்பொழுதணங்கேகுயத்தானுந்துயர்செய்வதே. ()

செங்கைக்கருவிளிசைவல்லிசேர்தளசிங்கமலர்
மங்கைக்கினியரகுநாதன்றேறவையில்வார்க்கடங்காக்
கொங்கைக்குநேரில்லையென்றேயிடுத்துவெங்கூர்விழிக்கு
மங்கைத்தலமின்றுநேரென்றுகாட்டியதாரணங்கே. ()

களிக்குங்கயல்வெடிபோயுயர்வானவெண்கங்கைத்தெண்
குளிக்குங்கரந்தைரகுநாதன்வெற்பிற்குவலயங்காத் [ணீர்
தளிக்கும்படிப்பெண்ணரசேதுணிவுற்றவ்வாழியுயி
ரொளிக்கும்படிவிடலாமோநெறியன்றுனக்கிதுவே. (கஉசு)

தடமேவுதேவைப்பதிபுரப்போன்றளவாய்மகிழத்
திடமேவுவெற்றிரகுநாதன்வெற்பிற்சிறியவனு
வடமேருவெற்புக்கெதிர்நிற்குமோவரிவாளரவப்
படமேவுமல்குன்மின்னேயுய்யுமாறின்றுபார்த்தருளே. ()

வரமேந்துவெற்றியரக்கர்பிரானுயிர்வாட்டவொற்றைச்
சரமேந்துதேவைரகுநாயகன்றமிழ்வரைவெற்பி
லுரமேந்துநுங்கள்குலத்தியல்போவனைத்தாவெவரக்
கரமேந்திநின்றமடவீர்கலைகளவாகின்றதே. (க௱க)

வரிவளைநாணுமறகூடுமோவிவையங்குழத்தந்
சொரிதருதேவைரகுநாதன்வெற்பிற்கருதியபின்
றரிவளர்பூங்குழலாய்தமியேனையிங்காள்வதற்குக் [வதே.
கரிவெளிகோன்றப்பிணையென்றொடர்ந்தின்றுகைக்கொள்

சொற்பாவலர்தங்கிளைவாழச்செம்பொன்சொரியும்வண்மை
நற்பேறுதேவைரகுநாதன்வெற்பினலந்தருமிப்
பொற்பாருநங்கையைச்சேர்ந்தானுயிரைப்புரப்பதல்லால்
விற்பாவியமனிவெங்கரத்தோடென்கொல்வீழ்கிப்பதே. ()

கார்த்தாமவார்குழலீர்பசுந்தேனுமிழ்கானறுந்தார்
வேர்த்தாமமுல்லைரகுநாயகன்றமிழ்வரையன்னீர்
பார்த்தாதரவொடுபார்ப்பார்மறையிற்பரிந்தகத்தே
சேர்த்தாரென்றேநினைத்தாரிலவேதந்துசெயுந்துணிவே. ()

சிந்தாடவந்தவர்ரப்போடெழிலைத்தெரிந்துகொள்ள
வந்தாடவர்பணிமால்ரகுநாதன்வரையணங்கே
பந்தாடல்கண்டனமம்மானையாடலும்பார்க்கவரந்
தந்தாடல்செய்யிலுனைக்கெய்துங்காண்வெகுதன்மங்களே. ()

இல்லாரைக்கற்பமாக்கியுடையரெனினுமிகப்
பொல்லாரைக்கொல்லுஞ்செயரகுநாதன்பொருப்பனையீர்
வல்லாரைக்கற்பவளைகையழிந்தேகுமுன்னுவாகடமா
நல்லாரைக்கோரியகையாந்தகரையுநாடுவமே. (க௱௬)

விலைப்பாரரசரறியக்குனித்திகல்வென்றுவந்த
சொலைப்பாவலர்புகழ்மால்ரகுநாதன்சொனவரைக்குத் [தான்
தலைப்பாகைதுண்டமென்சோமன்முன்வைத்திரந்தனிற்கலங்
மலைப்பாரமாவணைச்சேலையிலாதமனையெனவே. (கஅஎ)

கண்டரிகம்பவுவாளைத்தெறலிற்கருதலர்வாள்
கொண்டரிகம்பமிலாரகுநாதகுபேரன்வரைப்
பண்டரிகம்புளமின்னேபொரவத்தம்பார்த்திருந்த
புண்டரிகம்பிணைமேற்பாயத்தந்திபுறப்பட்டதே. (கஅஅ)

தீனத்தைவென்றகொடைப்புகழ்கேட்குஞ்செவிக்கமுத
பானத்தையொத்தரகுநாதசேதுபதிவரைவாய்க்
கானத்தைவானத்தைநேர்சொலிடையொருகன்னியத்த
மீனத்தைநாடிச்செலக்கும்பராசிவெளிப்பட்டதே. (கஅகூ)

மஞ்சாங்கருதலர்போர்ப்படைமேற்சண்டமாருதம்போல்
விஞ்சாங்கமுலபலரகுநாதன்வியன்சிலப்பிற்
பஞ்சாங்கமோதியறைகாட்டிச்சொர்க்கமிப்பாற்படுத்தி
யஞ்சாங்குலத்தவர்பார்ப்பாரைச்சேர்ந்ததிசயமே.

பொருப்பதெதிர்வரல்போற்கஞ்சனுல்வந்தபோதகத்தின்
மருப்பதொசித்தசயரகுநாதன்மணியருவி
பருப்பதமீதுமலருஞ்செங்காந்தள்பரவையிற்பூத்
திருப்பததிசயங்காண்குன்றவாணரிளங்கொடியே. (கசக)

நாலாயுதத்தையிகன்மேற்றயித்தியர்ஞாட்பிலெதிர்
மாலாயுதத்தைப்புரிரகுநாதன்வரையணங்கே [ற்
வேலாயுதத்தைக்கைக்கொண்டுநின்றுயெதிர்வெற்புமெய்தா
காலாயுதத்தையனென்றுனேயேதொழுங்காசினியே. (கசஉ)

தொருந்தளவாய்மகிழ்செய்வீகத்தேவைத்துறைக்கரசைச்
சகுந்தவிலோசனத்தான்ரகுநாதன்சயிலமின்னே
புகுந்திறையைவர்தெரியாமன்மச்சபுரத்திருக்க
மிகுந்துரியோதனபாரவணிகள்வெளிப்பட்டவே. (கசங)

அங்ககலிங்கமலையாளமீழமனைத்தும்வென்ற
சிங்கவிசயசயரகுநாதன்சிலம்பிற்பொன்னே
சங்கிலியாரையுங்கண்டேன்பரவைதனையுங்கண்டான்
மங்களசுந்தரனென்றெனையேதொழுமண்டலமே. (கசச)

ஆலங்கையாதவமுநின்முன்னுளுண்டலகைகையைக்கொ
லேலங்கையாதருண்மால்ரகுநாதன்வெற்பேந்திழையீர்
சேலங்கைக்கொண்டபின்னேமலைபாளமுந்திண்டுக்கல்லைப்
போலங்கையாமஃதில்லாதபோதுபுலப்படுமே. (கசரு)

பாவூர்சங்கிராமவிசைகூதர்பாடப்பவனிவரு
மாவூர்நகுலனெனும்ரகுநாதன்வரையணையீர்
கோவூர்முன்காட்டியபின்குன்றத்தூர்வழிகூட்டியப்பா
லூர்நுங்காஞ்சிபுரங்காட்டுதற்குண்டைநாட்டியல்பே. ( )

எண்கட்டுமானபுற்றேன்றுடலர்படையேங்கவடுந்
திண்கட்டுவாங்கத்துரைரகுநாதவசீரன்வரைப்
பண்கட்டுமென்மொழியீர்நீர்மிகவும்பலரறியக்
கண்கட்டுவித்தையுஞ்செப்பிடுவித்தையுங்கற்றவரே. (கசஎ)

தாவியங்கற்றமிலாமற்பொருதச்சமரிலறை
கூவியங்கத்திகல்வெல்ரகுநாதகுமுணன்வெற்பி
லோவியங்கற்பகவல்லியன்னீரிவ்வுலகியற்கை
காவியங்கற்றவர்க்கேயத்தமாகுங்கடபடமே. (கசஅ)

கண்டரிதங்கையுரத்தையுமூக்கையுங்காதையும்வாள்
கொண்டரிகொண்டல்ரகுநாதன்றேவைக்குலவரைப்பூ
வண்டரிகங்குற்குழலீர்நாண்முந்திமடியலையாற்
புண்டரிகங்கண்முழுகத்தெரியும்புளினங்களே. (கசசு)

நாளத்தையம்புயவன்னைப்பணைச்செய்பிராட்டன்சக்கிர
வாளத்தைவென்றபுயரகுநாதன்மணிவரைமேல்
காளத்தைவெல்லுமைநாடகப்பாவையைக்காட்டுஞ்சம்மா
தாளத்தைநீயத்திமின்றீர்மக்கண்முந்தருகுவனே. (கரு0)

இடனைகமற்றைறலைனகச்சாரியியற்றிவொட்
டிடனைகவெமச்சியல்ரகுநாதன்சிலம்பிற்பெண்ணே
கடனைகத்தந்தவைரயெதிரேவரக்கண்டுமுழி
யுடனேகொடுக்கவுடையார்பிணையையொளிப்பதென்னே. ()

படியுமமாருகைமுமாசையும்பாதலமுங்
கெடிகொளிசைரகுநாதவீரன்கிரியணங்கே
கொடியுமுராசங்கணையுஞ்சிலையுங்கொடாமலணி
முடிமாத்திரமதனேனுக்களித்தன்முறையல்லவே. (கருஉ)

கேட்டத்தகுவருமுட்குமதாகைக்கிளர்புலவர்
பாட்டத்தகுசிரகுநாதசேதுபதிவரைவாய்
நாட்டத்தகுவனைமேவழுங்குவளைநளினமல்லி
காட்டத்தகுமிளநீரொன்றுகாட்டல்கணக்கல்லவே. (கருங)

ஆரங்கராசலமாநிதிவீரர்க்களித்திகன்மேற்
போரங்கமாகவருரகுநாதன்பொருப்பணையீர்
போரங்கமாகும்பகோணத்திற்பாதியைப்பின்மறைத்தீர்
சாரங்கபாணியெனும்பேரெவ்வாறுதகுமுமக்கே. (கருச)

சேண்டவர்வாழ்திருத்தேவையையாளுந்திருமணிமார்
பாண்டவர்தூதன்ரகுநாதசேதுபதிவரைவாய்
நாண்டவர்முன்னிட்டநிலையொளித்துத்தன்னற்பெயரைப்
பூண்டவர்தானத்தைத்தான்வாங்கிக்கொள்ளப்புறப்பட்டதே

விலையைமறைக்குங்கனகிரீடிவிவேகத்தெண்ணெண்
கலையைமறைக்குமனுரகுநாதன்கவின்வரைவாய்ச்
சிலையைமறைக்குநகலீர்முன்னாகத்தெரிசலின்றி
வலையைமறைத்துவைத்தீர்பாற்றவோசக்கிரவாகத்தையே. ( )

படமினியார்வரைந்தெண்டிக்குங்காட்டெழிற்பார்த்திபன்
திடமினிநீண்மந்திரவான்ரகுநாதனற்றேவைவெற்பிற் [கைத்
றொடமினியோங்குமணியீர்மைவாரியைத்தூர்த்தபின்பு
குடமினியேதுக்குநீரவலியக்கொடுக்கிறுமே. (கஎ)

வெம்பிற்கரளமெனக்காய்ந்திகலைவிடுத்துத்தன்னை
நம்பிற்கருணைபுரிரகுநாதநரேந்திரன்வெற்பிற்
செம்பிற்கனகமணியணியீர்முனங்கேசவன்கை
யம்பிற்கரன்படவெற்பரணங்களகப்பட்டவே. (கஅ)

வல்லாரங்காட்டியபம்பரத்திற்சுழல்வாய்ப்பரிமேற்
செல்லாரங்காட்டுமுராரகுநாதன்றன்றேவைவெற்பில்
வில்லாரங்காட்டுமணியீர்மதிப்புமிருந்ததனைக்
கல்லாரங்காட்டியநீரேகல்லாரமுங்காட்டினன்றே. (க௯)

அலசத்தைவாளியெனநேர்நகையையசற்றியழி
நலசத்தையேகொண்மகிழுகியாமரகுநாதன்வெற்பிற்
பலசத்தைநீடுமுவரிமதித்தும்பருக்குவைத்த
கலசத்தைக்காட்டியமுகத்தையேயுகரந்ததுவே. (௨௦

